# ௬-வது வாயு பூசித்த சருக்கம்.

---

### கலிநிலைத்துறை

என்று மாதவ ரியம்பலு மிருந்தவச சூத
னன்று நன்றெனா நாகிளம் பிறைக்கொழுந் தணிந்த
குன்ற வில்லியைக் குழைவொடும் வணங்கிவந் கூழ்வந்
தொன்று பூசனை யுஞற்றிய பரிசெடுத் துரைப்பான் ௧

உம்பர் கூறிய திறத்தினை யுலவைவேந் துடன்கொண்
டிம்பர் மானிலத் தெய்திக்கா விரிப்புனன் மூழ்கிச்
சம்பு வாழ்திரு மாணிக்கச் சைலத்தைத் தாழ்ந்து
நம்ப னாரரு ளாலந்த நல்வரைக் கீழ்பால் ௨

பாறை யொன்றினிற் பற்றிய வயிரத்தண் டதனு
னூறி வண்புன லொண்சுவை யமுதெனப் பெருக
வீற்றி லாதநற் றடாகமொன் றியலப்புறக் கண்டே
யாறு சூடியை யகத்துள்வைத் தப்புன லாடி ௩

செய்ய மாணிக்கத் திருமலை தனைவலஞ் செய்து
சைய மீதுறும் பசிம துவாரத்தார் சார்ந்தே
யையன் பாதபங் கயங்களை யன்பொடு வணங்கி
யுய்யு மாறுபற் பலதுதி யொருங்கெடுத் தோதி ௪

இமய வல்லிதன் னிருபத முளரிக ளிறைஞ்சி
யம்மவில் காதலி னைங்கர னடிமலர் போற்றிக்
குமரன் சேவடி கும்பிட்டுக் குழகன்வீற் றிருக்குஞ்
சிமய மால்வரைச் சிகரத்தை வலஞ்செய்து மகிழ்ந்தே ௫

இனைய வாறுமா ருதம்பல பருவமங் கிருந்து
முனைவன் சேவடி முதிர்ந்தபே ரன்பினாற் போற்றித்

துனிபி லாத்தவம் பற்பல வியற்றனர் தூங்க
வனையும் வார்சடை மௌலியான் வந்துதோன் றினனுங் க

காள கண்டமுங் காதல னாங்குழைக் கண்ணுர்
தோளி னீணிலாச் சொரியுமுந் நூலும்வான் சுடிகை
வாள ராமணிப் பணியுமுத் தூளமும் வயங்க
மீளி மால்விடை மேல்வந்து தோன்றும்வின் னவனை

உலவை வேந்தன்முன் கண்டன னுவகைமீ தூரத்
தொலைவி லாதபே ரன்பினுற் றுணைபடிக் கமலந்
தலையிற் சூடின னுறன்னையு மறந்தன னுவி.
பலவி லாதன வருந்துதி பற்பல வறைந்தான்

## எண்சீரடியாசிரிய விருத்தம்

கங்கா தரனே சரணஞ் சரணங்
கருணா நிதியே சரணஞ் சரணம்
பொங்கா ழியினஞ் சுண்டாய் சரணம
புரமூன் றெரிசெய் தருள்வாய் சரணம்
வெங்கா லனைபன் றடாத்தாய் சரணம்
விறகா மனைமுன் வென்றாய் சரண
மிங்கா தர்வா ரெந்தாய் சரண
மிரதனு சலனே சரணஞ் சரணம்

மருவா ரிதழித் தொடையாய் சரணம்
வானோ ரணிமா மணியே சரண
முருவா யருவா யுறைவாய் சரண
மொருநான் மறையின் பொருளே சரணம
கருவா யுலகந் தருவாய் சரணங்
கண்மூன் றுடைய கனியே சரண
மிருளா ரொளியா மியல்வாய் சரண
மிரத்னு சலனே சரணஞ் சரணம்
கல்லா லடிவாழ் கனியே சரணங்
கமலா சனனுக் கரியாய் சரணம்

## வாயு பூசித்த சருக்கம்.

நல்லார் பரவப் படுவாய் சரண
நாளு கலையும் நவில்வாய் சரணம்
வில்லார நுதலாள் பாகா சரணம
விடைமேல் வருவாய் சரணஞ் சரண
மெல்லா வுலகு நிறைவாய் சரண
மிரதனு சலனே சரணஞ் சரணம்

### எழுசீரடியாசிரிய விருத்தம்

மெய்மயி ரரும்ப நாத்தழும பேற
மேதகு மின்னன துதிக
ளையன்முன னியமபிச சதாகதி புணிய
வண்ணலு மவன்முகம நோக்கி
யுய்யநீ மனததி லுன்னிய வரங்க
ளுரைததியென றோதலு நாயேன்
வையமா ருட் மேருவைப பெயாதத
மாசொழித தருளுதி யென்றுக

என்றலு மிறைவ னவவர முதவி
யிடுசால் பிராணனே டபான
னுன்றிய வியான னுதானனே சமான்
னாககமாா நாகனே கூாமன்
றன்றருக ககலாக் கிருகரன் றேவ
தத்தனே தனஞசய னெனனும
வென்றிகொ ளீரைந துருவநீ யெயதி
மேதினி புரநதுவா ழென்றுன

புங்கவன் பின்னுர துலாமதி யதனகட
பூரணைப் பக்கத்தி லுனது
பங்கமீ றீரததம படிநதவா படிறு
பகருதல பிறாபொருள் கவர்த
விங்கிவை யாதி கரிசகன் றுய்ய

வின்னருள் புரிகுவ மென்ன
வங்கவற் குரைத்தே விளிங்கத்துட் கரந்தா
னளவிலா வருட்பெருங் கடலே கக

அண்ணலவான் கருணை யிருந்தவா றியம்பி
யதிசய மென்றக மகிழ்ந்து
வண்ண மாணிக்க மலையினைச சூழ்ந்து
வநதனை பலமுறை புரிந்து
கண்ணகள குளிர நோக்கியே பின்னுங்
கைதொழு தனிலவன் சென்று
நண்ணினன றனது பதியினை யெனறு
னறறவ முனிவரு நயந்தார் கஉ

அனிலவ னன்பாற பூசனை யியற்றி
யண்ணலி னருள்பெற்று மீண்ட
புனிதநற காதை படிததவர் படிக்கப்
பொருளபல வழங்கிய தூயோ
ரினிதென மகிழநதொ ரெழுதினோர் கடல்சூ
ழிபபுவி முழுவதும புரநது
பனிமதிக கண்ணிக குழகன தருளாற்
பரானநத வாரியிற படிவார் கங

வாயு பூசனை புரிந்த சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௭௩



# ௫-வது ஆதி சேடன்
# பூசனை புரிந்த சருக்கம்.

---

### ஆறு சீரடியாசிரிய விருத்தம்.

மாருதம் பூசை செய்து வரம்பெறு காதை முற்றுஞ்
சோருதல் சிறிது மின்றிச் சொற்றனை சூத விப்பாற்
றரணி சுமந்த சேடன் றற்பரன் றனைப்பூ சித்த
சீருரைத் திடுதி யென்று ரவனுமச் செய்தி சொல்வான் ௧

மதவலி வாயு வீசன் மலரடி பணிந்து மாகங்
கதுமெனப் பெயர்த்த மாற்றங் கதங்கெழுஞ் சேடன்கேட்ப
விதமுற மகதி நல்யா ழிருந்தவ னுரைத்த லோடுந்
திறமுறு மிமையோர் முன்னந் தெரித்ததுங் கருதியன்னோன்

பார்ப்பன வேடங் கொண்டு பாமிசை யெமதீ ரானைச்
சீர்த்தளி பலவுஞ் சென்று சேவிக்கு நசையான் மேல்பாற்
கார்க்கடற் கூலத் தோர்சார் கடிப்பவெம் பிறவி நீங்கக்
கூர்த்தமெய்த் தவத்தோர் போற்றுங் கோகன்னஞ் சென்று
வாழ்த்தி ௩

பிருகுகன் னத்தி னோடு பிரபாசம் பணிந்து போற்றி
மருமலர்ப் பொதும்பார் மந்த ராசலம் வணங்கிப் போந்து
மருவிபாய் பிரமசைய மனந்தனை யமுனைசென் றேத்திக்
கருதுசோ மேச மோங்கு கபிலேசம் வணங்கிப் பின்னர் ௪

தூயகே ளாத்தி னுற்ற சுசீந்திர மயேந்தி ரத்தோ
டேயகூ விளவன் கான மிறைஞ்சிநற் கதக்கூப் போ
ராயபாரப் பதீசம் போற்றி யழகுறும் வியாத சாலை
நாயக னுறையும் வேத நகரங்கோ ழேசம் போற்றி ௫

சுந்தர நதிதீ ரத்திற றலங்கவி ஞசி யோடவ
வந்தமில பதிக்குத தூய வங்கியந திசையின் மேவு
மந்தமா ருதமு லாவு மாகத வனஞ்சூழ வந்து
கொந்தலர் ப்வானிக கூடற குலநகா தொழுது மாதோ

சேயிதழ்க கமல பீடத் திருமகள் வனமவ ராகித
தூயசங கபவி சாலைத் தொலபுகழப பிரமம வாழத்தி
யேயவண் சுவேத வெறபை யிறைஞ்சியெம பெருமானமேவு
நேயமார திருகூ டதததோ டானிலை நேசித தேதகி

கொலவியுமபொருபபிற பஞசக குளிரநதிததீா ததநதோயநது
நலைறப்பளளி நாதா நாணமலாச சரணம போறறி
யொலலைவே தாச லததோ டோஙகுமீங கோயு மேததி
யலைறீாத தருளக டபபா டவிபுகுந தடைவின வாழததி ௮

முததொடு வயிர முநதி முரிவெண பருபபுப பீலிக்
கொததுடன சநதம வாரிக குஙகுமக குறடு வீசி
தததுரோப பொனனித தெனபாற றாதலமுழுதுமபோறறும
விததகத திருமா ணிகக வியனபொருப பதனைக கணடான் ௯

கணடபின னனைய வெற்பைக கணணிணை குளிர நோககித
தெணடெனப படியின வீழநது சிநதனை மகிழநது போறறி
வெண்டிரைப பொனனி மூழகி விரைவு மீதூர வெயதி
யண்டாநா யகனைப போறறு மாசையா லாஙகு செல்வான ௰

அததிரி வியாதன காததி யாயனன் பாததது வாசன்
விததகத ததீசி கௌதமி மேவிய பிருகு மேலோன்
புததமு தாச னிபபோப புனிதன்மா தவஙகூர் கறகி
யிததகை முனிவ ரங்க ணிருநதவ மியறறக் கண்டான் ௧௧

அன்னவா தம்மைப் போற்றி யனுமதி பெறறுச சேடன்
முன்னவன் சிகரத தேறி முதலவிசந நிதிக்குத் தென்பாற்
றன்னுடைக் காஙகை டப்மாற றடாகமொன் றதைமகது மூழ்கிப்
பின்னருமம் முறைசூழ் வந்து பெருநதகை கோயிற் புக்கான்

புகுந்தடி வணங்கிக் கண்ணீர் பொழியமெய் புளகம் பூப்ப
மிகுந்தபே ரன்பாற் போற்றி வெய்யவன் றீர்த்தந் தன்னைத்
திகழ்ந்தநூற் றெட்டுக் கும்பந் திவ்யலிங் கத்துக் காட்டித்
தகும்புது மலர்கள் கொண்டு தற்பரன் றனைப்பூ சித்தான் ௧௩

பூசனை புரிந்த லோடும் புண்ணியன் கருணை பூத்து
நேசமுற் றெதிர்நின் றேத்து நெடும்பணி வேந்தை நோக்கி
யாசையா யினையா மீது மறைதியென் றருள வன்னோ
னீசனே யெந்தாய நின்றாட் கினியவ னென்றும் வேண்டும்

ஆயினு மேருக் குன்றை யனிலவ னலைக்க யானு
நாயக நிமித்த மாகி நண்ணிய வனைய தீமை
போயகன் றிடுதல் வேண்டு மென்னலும் புனித னல்கி
யேயுமவ் விடைமே லுற்றோ னிலிங்கத் துட்கரந்தா னன்றே

சேடன்கூர் மகிழ்வி னுற்றன் சிகாமணி யினைத்து ளொன்றை
யாடகப் படிமே லீசர்க் கணிவிளக் காக வைத்துத்
தோடவிழ் கொன்றை யெம்மா னிணையடிக் கமலம் போற்றிப்
பீடுடைத் தனது செம்பொற் பெருநகர் புகுந்தா னன்றே

கள்ளவிழ் மலர்ப்பூங் காவிற் கற்பகக் காவு மானி
னொள்ளுருங் காம தேனு வென்பதும் புணரி தன்னுட்
டுள்ளுறு தீம்பால் வெள்ளத் தடங்கட லதுவும் போலு
வள்ளல்வாழ் திருமா ணிக்க மால்வரை சிறந்த தன்றே ௧௭

தீதினமந் திரத்திற் காயத் திரியுநின் மணிபதன் றத்துப்
போதவிழ் பொதும்பர்சூழ்ந்த பொன்னெடுங் குவடு மாற்றுண்
மேதகு கங்கை யாறும் வேந்தருண் மனுவும் போல
மாதவர் புகழ்மா ணிக்க மால்வரை சிறந்த தன்றே ௧௮

அரியதீஞ் சுவைக்க டம்மு ளமிர்தமு மாத ராருட்
பொருவிலா விமைய மீன்ற பூங்குழ லணங்கும் வாச
விரியல ரவற்றுட் செம்பொன் மேதகு கமல மும்போல்
வரமிகு திருமா ணிக்க மால்வரை சிறந்த தன்றே ௧௯

அருவிபாய் மேருக் குன்றத் தாயிரங் குவட்டி னொன்றும்
பொருவிலா விங்கோ யாதிப் பொற்சிக ரங்க ளெங்கும்
முறைசெயி னதிக மாகு மோதிய வவற்றி னொன்று
மருவளர் திருமா ணிக்க மால்வரை சிறந்த தன்றே உ0

தொழத்தகு கன்னி மாதச் சுக்கில பக்கத் தூற்ற
விழுத்தகு சதுர்த்தி தன்னின் மேதகு நாக தீர்த்தத்
தொழுக்க முற்றடி னோர்க ளுமாபதி யன்பர்க் கின்னு
விழைத்தவத் தீமை நீங்கி யிமையவர்க் கிறைவ ராவார் உக

சூரிய குண்டந் தனனிற் சூரிய னுயர்வா ரூதி
லாரவமிக் காடி னோர்க ளருமபிணி யெவையும் நீங்கிப்
பாரிடை நெடிது வாழ்ந்து பரமபரன் கருணை தன்னாற்
சீர்கெழு சுவர்க்க மேவிச் செல்வமுற் றிருப்ப ரன்றே உஉ

பொறிப்பணப் பாந்தள் வேந்தன் பூசனைப் புரிந்து பெம்மான்
றிறத்தருள் பெற்ற காதை செப்பினர் தெளியக் கேட்போர்
கறைக்களத் தரகர் தன்னுறை கதுவுத வினற்ப பாரமேன்
மறைக்கமற் றிருந்து நாதன் மலரடி நீழல் சேர்வார் உங

ஆதிசேடன் பூசனை புரிந்த சருக்கம்

முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் உ0உ



## சா-வது இந்திரன் சாப
## விமோசனச் சருக்கம்.

---

**கலிநிலைத்துறை**

என்று சூதமா முனிவர னிசைபபமா தவத்தோ
னன்று நீயினி யுயாபுகழ நாகநாட டிறைவ
றுன்று பாவவி மோசனஞ் சொறறிடு கெ
ரொன்று மனபினு லபமுனி வரனெடுத் துரைப்பான் ௧

**கலிவிருததம்**

அறைகடல் கடைநதபுத தமிாதம விண்ணவா
பெறுவதற் கெண்ணிமுன பிறஙகன் மநதரஞ
செறிவுறு மதகெனச சோததி வாசுகி
முறைதிரி நாணென முறறுஞ சுறறியே ௨

வானவ ரொருதலை மதுகை வாகைவிற
றானவ ரொருதலை தமது செஙகையான
மோனமெய்த தவததினீர் முறுக வீாத்தலும்
பேனமுன் னமுநதிரைப பெறறி கணடமால ௩

தோடவிழ்ந திளநறுத துளிக்குந தாமரைக
காடுபூத தனையவன் கையி ரண்டினலை
ஈடுறப் பறறிநின் றீாத்திட் டானதிற
பீடுறப் பிறந்ததிப பெறறி முறறுமே ௪

மருப்புநான் குடையமாக் களிறு வாம்பரி
தருக்குல மணிக்குவை சங்க மியாவுரும
திருப்புறு நிதிகளவாா வீசி விம்மிய
வருப்பிள வனமுலை யரபபை மாதரார் ௫

அம்புயா சனததில்வீற் றிருக்கு மாயிழை
யிம்பவா யகலிக்கை விளங்கு வாஞ்மதி

யிமைபா ரேத்துறு மினிய புத்தமு
தமைப்ரு மகிழ்வுற வுதித்த வென்பவே ௬

வண்டுழா யலங்கலான் வான வேந்தனுங்
கொண்டிற லதுபெற வுவந்து நல்கிய
தெண்டிரைப் பிறந்ததெள் ளமுதொ டைந்துபூம்
புண்டரீ கைப்பக மொளிய வைத்தனன் ௭

தெள்ளறல் படர்நெறி செறிந்த நீக்கரு
மள்ளிருள் குடபுக வலங்கல் வேந்துதேன்
றுள்ளிகொள் காரினை துறந்து காவலா
மெள்ளிய கருங்குழ லெழிலெ றிப்பவே ௮

முற்றுறு விளமதி முகிழை யேசிவான்
விற்றிறம் பழித்துவில் வீசு பட்டமு
முற்றபொற் சுட்டியு மொருங்கு சோசிறு
நெற்றிமேற் கின்றுயிர் நிறைபொ லுண்ணவே ௯

இருங்கடற் றிரையினை யிகழ்ந்து காமவேள்
பொருங்கழைச் சிலையினைப் போன்று வேபபிலைக்
கொருங்கிணை போக்கத் திரிகைக் கொத்துறு
கருங்கொடி புருவமோ கவிந்து காட்டவே ௰

சேலெனப் பிறழ்ந்தரி சிந்தி வெம்முனை
வேலென மிளிர்ந்துமான் வெளக வெண்ணிலாக்
கோலினை யொத்திரு குவளை வென்றகண்
மால்புரிந் தனங்கற்கு வாகை சூட்டவே ௰௧

எள்ளிளம் பூவினை யெள்ளி மென்குமி
ழொள்ளிய போர்தைவென் றெழுந்து பொற்கொடி ·
தள்ளிய நாசிபச் சோந்தி தன்னுருக்
கள்ளியல் புரிந்தொளி கனிந்து காட்டவே ௰௨

வண்ணமென் கபோலமோ ரிரண்டு மாசவேக
கண்ணடி யாமெனக் கவின வார்ந்துலாய்த்த

தண்ணெனும் வள்ளையந் தண்டெ மூசனு
நண்ணிய காதென நலம்ப டைப்பவே ௰௩

தொண்டயங் கனியுங்கிஞ் சுகமுந தோழமை
கொண்டசெம பவளவாயக குமுதம வென்றிடத
தண்டள வதநிள முகையைத தண்ணகை
வெண்டர ளததொடும வெனறி கொளளவே ௰௪

மறுத்துடைத் தொளிதிகழ மதியின் வட்டமு
நறைக்கம லததலர நலனு நாணுற
நெறிபட நோக்கியோர நெடுங்க ணேக்கெலாஞ
சிறைபபடுத தியமுசஞ் செவவி காலவே ௰௫

காகுடன் பழகுபு கானம பூசிமென்
பூகமொத் தருபணி கடைநத பொறபின
தாகுநன கழுததணி யணிநத ரபபைமா
ரோகைகொண டேததநீ டொளித ங்ழககவே ௰௬

வேயிணைப் பழித்ததோள விலகி விலலிட
வேயுமுன கைகளயா மெழிலக வற்றிடச
சேயொளி யஙகைசெங காநதள போனமென
வாயுமெல விரலகெளிற றழக ளிககவே ௰௭

பொருபபொடுங கசசினைய பொருது பூரிதது
மருப்பினைப பழிததுவேள மகுட மாமெனக
கருபபுரக சலவைகை செய்த பூண்முலை
யுருபபசி தனையு முளமு ருககவே ௧௮

ஆலிலை தனைவெறுத் தரிகை போன்றொரு
நீலரோ மாவரை நிலவ ரோகைமுன்
னைலுறு திரையென விலக ரோசசுழி
மாலுறு முநதிமேல் வயிறு பொறபவே ௧௯

மின்னென நுடங்கிமென கொடியின் வீறழித
தின்னதிங் கெதுவென வெவாக்குங் கண்ணுறா

தன்னருண் ணிடைகளை யஞ்சும் வல்லவன்
றன்னையொத் தலர்முலை தாங்கி யையவே ௨௰

வாளராப் பணமென வயங்கு தேரெனக்
கோளிலாப் பசும்பொனாற் குயின்ற தட்டென
வேலையா ளாகவே விற்கு மல்குல்வண்
காளையா டவர்களைக் கருத்து ருக்கவே ௨௧

வாழைத்தண் டெனத்திரண் டுற்ற வான்றுடை
வேழத்தின் றடக்கையை வென்று வீறுற
வாழத்தண் புனற்றிரி யலவ னொத்துல
கேழுக்கு மான்முழந் தாளி ழைக்கவே ௨௨

சினைவரால் வென்றுவேள் சினனம் போன்றுமெய்
முனைவரா னவர்களு முடிவ ணங்கவே
புனைகுலாந் தூணிகைப்ப பொருது பேரெழில்
கனியுமா றிருகணைக் காலவி ளங்கவே ௨௩

பரடுபொற் றராசினைப பழித்து வீறுறப
புனைதவிர் புறவடி யாமைப பொறப்புற
விரல்செழும் பவளத்தை வெல்ல மெல்லுகிர்த்
தரளமொத் தடிபஞசின றகைமை காட்டவே ௨௪

நின்றன ளகலிகை நின்ற காலையி
னன்றறி கோதம னயத்தை நோக்கியே
மன்றவந் துளவினை கொடுப்ப வாசவ
னின்றெனக் களித்துயி ரெனக்கு நல்கென்றான் ௨௫

வாசவ னத்திறம் வகுப்ப மாயனு
நேசமுற் றீமபுன னெடிது மூழ்கினே
ராசைபிற கொண்மினென் றறைய வாங்கவ
ரோசைபெற றுறுபுன லொருங்கு மூழ்கினர் ௨௬

வெளிவா ரணப்பகட் டுழவன் வெள்ளநீ
ருளபுகுந் தோய்ந்தன வும்பர் தோன்றினன்

பள்ளநீர்க் கிடந்தனன் பாசி கோரையுந்
தள்ளல் பாய்ந் திடமுனி யநேக கற்பமே உஎ

மொய்குழ லகலிகை போக வாரிபோ
லொய்யென வாரியி னாழி மூழ்கினை
பொய்தப வினியவள் போக வாரியிற்
செய்தவ முழுகென்றான் றிகிரி தாங்கினான் உஅ

இவ்வகை யிசைத்தது மெழுந்து மாதவன்
மௌவலங் குழலினை மணந்து மற்றவள்
செவ்விய புணர்நலந் திளைத்துத் தேகமெற்ற
துய்வகை யவ்வயி னுறைந்திட் டானரோ உகூ

அன்றுதொட் டகலிகை யணியும் பூண்டுயர்
குன்றென வருமுலை கொடுத்த காமநோய்
தன்றலை மேற்கொளத் தளர்ந்து வாசவ
னென்றல பற்பல வுளத்தி லெண்ணுவான் கூ0

பஞ்சஞ்ச மலரடிப் பாவை தன்னையோர்
வஞ்சஞ்செய் தாயினு மணந்து மியாமென
நெஞ்சங்கொண் டொருகுயி னொருமா றுகொண்
டஞ்சந்துஞ் சிருளிற்கூ யாத்திட் டானரோ கூக

வரிக்குயி லுருக்கொடு வந்து கூவலும்
பொருக்கென வெழுந்துநற் புனித மாதவன்
குருக்கிளர் நதிக்கரை குறுகித் தண்புனற்
றருக்கொடு துயிலுமத் தன்மை கண்டனன் கூஉ

மெய்முனி வஞ்சமீ தென்று மீளலும்
பொய்ம்மையி லுவனுருப் புணர்ந்து வாசவன்
கொய்மலர்க் குழலியைக் கூடும் வேட்கையாற்
கைமலர் பற்றினன் கரிசு பற்றினான் கூ௩

மாசறு முனிவனக் காலை யெய்தலும்
பூசையாய்ப் போந்தனன் போத மாதவன்

கோசமா யிரம்பெற வென்று கோபித்தான்
வர்சவ னவ்வகை மாசண் டானரோ

பூம்புனற் பொய்கையுட் போந்து நாணினாற்
றேமபொதி தாமரைச் செவ்வி யரிதழ்
தாமபொதி பொகுட்டினிற் றங்கி னான்புரந்
தோம்புத லின்றிவிண் ணுலக னைபவே ௧௩

பூங்கொடி தன்னையும் புனித மாதவ
னீங்கருங் கலவியி னெறியி னுளிவன்
றீங்குசெ யிந்திர னென்று தேரியு
மாஙகுடன பட்டனை பேதை யாதலால் ௧௪

கல்லுருக் கொண்டிவண் கிடத்தி காகுத்தன்
மெல்லடித் துகளுறும வேலை காறுமென்
றல்லுற நிடசபித தறவ னீங்கினா
னெல்லையில பருவமல லியலும வைகினாள ௧௫

இறைமக னின்மையி னீண்டு தாதிருக
குறைபட வானவர் குழாமுங் குன்றின
வுறுமழை யொழிதலா லுண்டி யின்மையா
லறைகடு லுலகமு மழுங்கி னொந்ததே ௧௬

விண்ணவர் குரவனு மேலிவை நோக்கிய
பண்ணவர்க் கிறைவன் பழியி னீங்குமா
றெண்ணினன் பொய்கையங் கரையை யெய்தினா
னண்ணலைக் கூவினா னன்பு கூரவே ௧௭

மந்திரி கூவலும் வான வேந்தனு
மந்தமி லுவகையா லருகு நண்ணுதற
கெந்தைசா பந்தினா லேதமுற்றுநா
ணைந்தன னீககொணா நாண்ட டைந்ததே ௧௮

வருவதன் முன்னமே மாசு றுவகை
பெரிதுகாத தியல்வது பெருமை யவ்வகை

பொருளினை யினியிஃ தொழித்துத் தேர்வது
கருமமென் றுரைத்தனன் கனவேந்தனும் ௪௧

நன்றெனமனங்கொளா நாண நீங்குறச்
சென்றெதிர் வணங்கினன் வணங்கிச் செல்வநீ
யின்றெனக் கினியருள் புரிதி யென்னவே
ஒன்றல பற்பல வுரைத்திட் டானரோ ௪௨

உரைத்தலுஞ் சுரர்குரு வுவந்து வீசுவெண்
டிரைக்கட லுடுத்தவித் தீவிற் றெய்வதப்
பருப்பதம் பற்பல பதிகள் பற்பல
மருக்கிளர் நதிபல வருந்த லென்கொலாம் ௪௩

வெள்ளியங் குவட்டொடு விளங்கு மந்தரம்
வள்ளல்வீற் றிருந்தருண் மல்லி கார்ச்சுனங்
கள்ளவிழ் பொதும்பர்கற் குடிவிண் டோளத்தி
யெள்ளருங் கழுக்குன்ற மிடப மால்வரை ௪௪

அருணையங் கிரிதிருத் தணிகை யார்மலர்த்
தருவளா கொடுமுடி தாவி லாதநற்
றிருவளர் கொல்லிநற் றிருச்செங் கோட்டொடு
பொருவிலீங் கோய்மலை பொதிய மால்வரை • ௪௫

பழமலை சிராப்பளி பழனி மாமலை
விழைவுறு பரங்குன்று வியன்ம யேந்திரந்
தழைதிகழ் பொதும்பர்சூழ் சைய வெற்பொடு
குழகன்மே வியதிரி கூட மால்வரை ௪௬

ஏடவிழ்த் தளியின மினிதி னேழிசை
பாடலும் புதுமதுப் பாயுஞ் சோலைசூழ்
கேடில்கே தாரம்வான் கிளருந் தண்பொழிற
சீடுறு மாதனப் பெரிய நீள்வரை ௪௭

கன்னலுந் தேறலுங் கனியு மாமெனச்
சொன்னலந் திகழ்வரைத் தோகை தன்னொடும்

பொன்னிலங் கவிர்சடைப் புனிதன் வாழ்வுறு
மிந்நில வரைகளு மினிதுண் டாமரோ ௪௮

வாநதி காளிநதி வாணி பற்குனி
சரயுவா னதிதிருப பெண்ணை சங்கமா
நுரைபெரு கண்டகி யோடு தண்புனற்
புரையிலகோ தாவிரி புனிதநீப பமபை ௪௯

துஙகபத் திரைநவில சோணை காவிரி
பஙகவா ரிதிபுனற பாலி மாநதி
பொஙகுதஞ் புனலவகை பொருநை யெழுதீற
சஙகமா நதிபல தாமுண டாமரோ ௫௦

காசிவீ மேசுரங காஞசி மாநகா
தேசுலாஞ சிதமபரந திருககு டநதைநம
மீசனு ருகநதரு ளிலமபிய மாணைககா
வோசைசூா மறைவன முறறு வாஞசியம ௫௧

வயஙகுவெண காடிடை மருத மாநதுறை
நயஙகொளசீ காழிமா யூர நனனிலம
வியநதிடு நாகைநள ளாறு வீறுசால
பயனபுரி நெலைவயை யாறு பாமபணி ௫௨

ஆனிலை யுயரவி ஞசி யனபிறை
கோணுறை மகோதைகீழக கோட்டங கூடலபூந
தேனுலாம வெய்வனஞ சேது வேழுதல
வானவ னமாபதி மறறு முண்டரோ ௫௩

ஆதலாற பருபபத மனைததுஞ சூழ்வநது
சீதநீர் நதியெலாஞ சென்று மூழகுபு
காதலாற பதிபல கண்டு கைதொழூ
தேதநீ போக்குதி யிரங்க லெனகோலாம் ௫௪

இருநதவம் புரிநதுளோர்க் கெய்து றுகதெ
னருநதிறற கொறறமு மளவில் செல்வமுந

திருந்திய ஞானமுந் திதின முத்தியுந
தருமுயர் கற்பகந தவமென் றோதியால் ருரு
இன்னண மந்தண னியம்ப வானுளோர
மன்னனும வநதடி வணங்கி வாய்மையான்
முன்னவன் பதமலர் முடியிற சூடுவா
னன்னவ னுறைபதி யனைதது நண்ணினான் ருசு

எய்திவா னவாக்கிறை யாணடு பறபல
செயதவம புரிநதனன் செலலுங காலையி
லுய்யுநா ளெய்தலு மோங்கு மாணிககச
சையநோ கணடனன் றளாசசி காண்கிலன ருஎ

அறுசீரடியாசிரியவிருததம

காண்டலு மகவா னேககிக் கரகம லஙகள் கூபபி
பூணடெழு மனபாற பொனனி மூழகினை றலக மேததரு
சேண்டொடு திருமா ணிக்கச செழுமலைச செம்பொற கோயி
லிண்டொளிப பிழபபை யுறறு னிருமையும்பெறறு னேறறான

முபமுறை வலஞ்செய தனனேனை முடியினு படியிற றுழந்தே
யயமலை தனனி னேறி யணணலசந நிதியிற பினனுந
தெம்முனை கடநத வேநதன சேவடி வணங்கிப போறறி
மெய்பபயிா முகிழபப ரோககி விழிகணீா பொழிய நினறான்

நின்றவன மீட்டு மீட்டு நிததனை வணஙகிப போறறிக்
கொனறையஞசடையோனீண்டுகுடிகொணடு வாழவெனனறே
யொனறிய வுளதத னாகி யுறுதவன சபிதத சாப
மின்றெமக் கொழிப பதிந்த விரத்தின கிரியெனறோநதே கூ

வசசிரப படையி னலம மாணிக்க வரையின் பாஙகா
செச்சையங் கலவை மார்பன் றீரததமொனறமைததவவெறபி
னுசசியிற றேவ தீரத்த மொனறுமகண டுமபர் வேலை
யசசுதன் மதிக்க வநத வமிர்ததா னிறைதது மாதோ சுக

பைந்துழா யலங்கன் மாயன் பாறகடல கடைநத வனஞா
றைநதரு வுடன்வந் துறற வாயவேம புனைக்கீ சானச

சுந்தரத் திசையி னூன்றிச் சுதையினிற் பூரித் தன்பாற்
சிந்தையின் புறவி லிங்கஞ் சிறப்புடன் றாபித் தன்றோன் கஉ

மறிதிரைப் பொன்னி மூழ்கி வச்சிர தீர்த்தந் தோய்ந்து
வெறிகமழ் தேவ தீர்த்த விபன்றடம் படிந்து முக்க
ணிறைவனை வலஞ்செய் தேத்தி யிமையமா தினையும் போற்றி
நறைகமழ் நிமப நீழ லண்ணியஞ் செழுந்து மோதி கங

விண்ணவர்க் கிறைவன் வேத விதிமுறை வழுவா தன்போ
டுண்ணெகிழ்ந் தவனை மேற்கொண் டுயிர்க்குயி ராகு முக்கண்
பண்ணவற் றொழுது போற்றிப் படிமவே டத்த னாகிப்
புண்ணிய தேவ தீர்த்தப் புடையினோர் குகையின் வைகி கச

இடையுஞ் சிகலையும் வாயு வியங்காத படிம டக்கி
யடியினா லனலை மூட்டி யகநாடி யிடையே போக்கி
முடிவிலா ரமுது தேக்கி முபறசியொன் றானு மின்றித்
தடையிலாப் பிரமா னந்தத் தன்மய மாகி யுற்றான் கரு

பருவமொன் றினைய வாறு பண்ணவற் கிறைவன் வைகத்
திருவிளம் பிறையுங் கங்கைச் செம்பொனின் முடியு மல்கு
வருள்பொழி முகமு மானு மடல்கெழு பாசு மேந்து
கரதல மலருங் காள கண்டமுங் கவின்கொண் டோங்க கசு

புலியத ளசைத்து வெய்ய பொறிப்பணப் பணிகள் பூண்டு
நிலவொளி பரந்தா லென்ன நீறுமெய் விளங்கப் பூசி
யிலைப்பயி லிதழி மென்பூ வேடவிழ் தெரியல் சூடி
மலைமக ளொருபால வைக மால்விடை மீது வந்தான் கஎ

வரவெதிர் தோன்றி நின்ற வள்ளலை வான வேந்த
னரதமி லவனைக் கூட வடிமலர் முடிமேற் சூடிச்
சிந்தனை மகிழ்ந்து மீண்டு சேவடிக் கமலம் போற்றி
பெந்தையே யுய்ந்தே னென்ன வின்னணம் வழுத்து கின்றான்

புரிசடை முடிமேற் கங்கை புனைந்தருள் குழகா போற்றி
யுருவிலி யங்க வேளை யுருத்தகண் ணுதலாய் போற்றி

பருதியு மதியு மாகும் படரொளி விழியாய் போற்றி
யருமறை யனைத்துஞ் சாற்று மத்தனே போற்றி போற்றிகக

சங்கவார் குழையுந் தோடுந் தரித்தரு ளின்றவா போற்றி
வங்கவா ரியினஞ் சுண்ட மணிமிடற மலா போற்றி
சிங்கமா யெழுந்த மாலை சிபபுள் யடாத்தாய் போற்றி
வெங்கண்மான் மழுவோ டேந்தும் விமலனே போற்றி
போற்றி எ0

அருந்திற லேனக் கொம்போ டாமையோ டணிந்தாய்போற்றி
இருந்துணை மணிக்கச சாகச சீறர வசைத்தாய் போற்றி
பொருபபகை மேற்கொண் டுற்ற புலியத ளுடுத்தாய் போற்றி
கருங்கயத் துரிவை போர்த்த கடவுளே போற்றி போற்றி எக

தூயபல கோடி வேதந் தொடுகழல் விசித்தாய் போற்றி
மாயன்கண் ணிடந்து சாத்தும வனசசசே வடியாய போற்றி
காயமு லெனன வந்த காலனைக் காய்ந்தாய போற்றி
தேய்வுற மதியந் தேயத்த செலவனே போற்றி போற்றி எஉ

மூபபுர மெரித்தாய் போற்றி மூலகா ரணனே போற்றி
திபபிய வடிவாய போற்றி தேவாதந் தேவே போற்றி
யொப்புமை கடந்தாய் போற்றி யுறுதவப பயனே போற்றிக்
கப்புடைச சூல வைவேற காத்தனே போற்றி போற்றி எங

அக்கர வணிந்தாய் போற்றி யகிலமு மானாய போற்றி
செக்கர்வா னிறத்தாய் போற்றிச் செங்கண்மால விடையாய்
போற்றி
நக்கனே போற்றி யென்னை நயந்தருள் புரிவாய் போற்றி
தக்கன்றீ வேள்வி சாய்த்த சப்புவே போற்றி போற்றி எச

வெள்ளியங் கிரியின் வைகும் விண்ணவர் தலைவா போற்றி
யுள்ளொளி யாகி நின்ற வொருவனே போற்றி வாசக்
கள்ளவிழ் கடுக்கை மாலை காதலித் தணிந்தாய் போற்றி
தெள்ளிய சாம கீதச் செல்வனே போற்றி போற்றி எரு

வெண்பொடி யணிந்தாய் போற்றி வேதநா யகனே போற்றி
தண்பிறை முடித்தாய் போற்றி தற்பரப் பொருளே போற்றி
யெண்கண்வா னவன்க பால மேந்துபிஞ் ஞகனே போற்றி
நண்பனே போற்றி யார்க்கு நாதனே போற்றி போற்றி ௭௬

திருமுடித் தழும்பா போற்றி செழுமலைக் கொழுந்தே போற்றி
பொருதிரைப் பொன்னி நன்னீர் பொசிவாசி கொள்வாய்
போற்றி
வரையகம் பகிர்ந்து காட்ட வாட்போக்கி மகிழ்ந்தாய் போற்றி
துரிசறு மடியா ருண்ணுந் தூயசெங் கனியே போற்றி ௭௭

இத்திறம் வான வேந்த னிருகணீ ரருவி பாயக்
கைத்தல முகிழ்ந்து மேனி கம்பித்துச் செப்ப வன்பாற்
பத்திமை மேன்மே லோங்கிப் பணைத்தெழப் புளகம் பூப்ப
நித்தனைப் போற்றி நின்று னிற்றலு நிமலன் சொல்வான் ௭௮

நெஞ்சகத் தன்பினாலு மேபுரி நியமத் தாலு
மஞ்செழுத் தோதி யோகத் தமர்ந்திடு நிலைமை யாலுஞ்
செஞ்சொல்கூர் துதியி னாலுந் திருவுள மகிழ்ந்தோம்
வண்டு
செஞ்சிலை வாங்க வெல்லா மியம்புதி யீது மெய்ம்முனி ௭௯

முன்னைநின் கருணை யால்வா னுற்றுறு வரங்களி யாவை
யன்னவை யொழிக மேலா மருந்தவன் சாப நீங்கப்
பன்னகா பரண வின்று பாலித்தல் வேண்டு மென்னச்
சொன்னகா வலற்குப் பெம்மான் சுரந்தருள் பொழிதல் செய்
வான் ௮0

அலர்கதிர்ப் பருதி வெம்மை யாற்றினு மாத வத்தி
னிலைகெழு வாலு கத்தி னிற்பதிற் கரிதா லவ்வா
றுலகினி லெமக்குத் தீமை யுஞற்றினு முய்வ ருய்யார்
குலவுநற் றொழும்பு பூண்டோர் கொள்கையிற் பிழைத்தா
ரன்றே ௮௧

ஆதலா னம்பா லன்பா லருந்தவன் சபித்த சாபம்
போதவே வரிதென் றாலும் புரிந்தநின் பத்தி தன்னாற்
காதலா லிவைக ளெல்லாங் கமலம்பூத் தனைய கண்ணைப்
நீதியிற காணத் தந்தோ நின்பதி யடைதி யென்றான் ௮௨

என்றலு மிமையோர் வேந்த னிறைவனை யுமையா ளோடுஞ்
சென்றெதி ரவணங்கிப் போற்றிச சிந்தனை களித்து மீட்டு
மொன்றல பலவும் போற்றியுரைத்தவித் துதியைசசொற்றோர்
நன்றுறப் புரிதி யென்றா னம்பனு மதற்கு நேர்ந்தான் ௮௩

சோதிலிங் கத்தி னூடே தோன்றலபுக் குறைப வேந்த
னீதியின வணங்கி நெஞ்ச நிருமல னிடத்து வைத்தே
மாதவா விண்ணோ சூழ மடங்கலந் தவிசி னேறி
வேதனை யெவையுந் தீர வீற்றினி திருந்தா னன்றே ௮௪

இந்திரன் சாபந் தீர்ந்த விப்பெருஞ் சரிதை தன்னைச்
சிந்தனை மகிழ்ந்து கற்றோர் தெரிவுற வெழுது கின்றோர்
அந்தமி லாழி காலு மகிலமும் புரந்து மேலாஞ்
சந்திர மௌலி பாதத் தாமரை நீழல் சேர்வார் ௮௫

இந்திரன் சாப விமோசனச் சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௨௮௫.



# எ-வது இடிபூசித்த சருக்கம்.

---

அறுசீரடியாசிரிய விருத்தம்.

சுராபதி சாபந் தீர்ந்த தூயமாக் கதைமுற் றுந்
தெருளுறத் தெரிந்தா யிப்பாற் செங்கதிர்ப் பருதி தீர்த்தம்
பெருமைசீ யுரைத்தி யென்னப் பெருந்தவ ருரைப்பப் பெம்மா
னிருபதம் முளரி யேத்தி யியம்பினன் சூதன் மாதோ ௧

ஒழுகொளி வீசுஞ் செய்ய வுதயமால் வரையின் பாங்கர்
வழுவிலா வளங்க ளெய்து மந்தேகத் தீவி லங்கண்
முழுவலித் திரடோள் வெற்றி முரிவெற் பரக்கர் விண்ணோர்க்
கழிவுசெய் துழலுந் தீயோ ரழலெழ விழிக்குங் கண்ணா ௨

கனறிய மனத்தோ ரேழு கடலையுங் கடக்க வல்லார்
நன்றியொன் றறியார் பாரி னுப்பணுற் றெவையுந் தாங்கும்
பொன்றிகழ் சிகரக் கோடி பொலிந்துள வடபான் மேருக்
குன்றையுந் துகள்செய் கிற்பார் கூற்றுக்குங் கூற்ற மன்னுங்

அத்திறத் தரக்கர் தோன்று மலர்கதிர்ப் பருதி தன்னை
முத்தலைச் சூலத் தாலு முரிவேற் படையி னாலும்
மைத்தலை நாகம் போலும் பகழியி னாலும் போர்செய்
தித்தலைத் தோன்று வண்ண மிடுக்கண்செய் திகழு நாளில்

பேரொளி விரிக்கும் வெய்யோன் பிறங்குதே ரிறங்கி யோர்நாட்
போர்செய வாற்ற னாகிப் பொருவலி போக்கிப் போக
வோர்வதை யுணர்ந்து வானோ ரொருங்குவந் தெய்தி வெய்ய
காரிற வரக்கர்க் கஞ்சுங் கவலைநீ யொருவி யின்றே ௫

திங்களங் கண்ணிப் புத்தேள் சேவடிக் கமலம் போற்றித்
தொங்கவிழ் மலர்க ளேவிக் குடந்தம்பட் டிறைஞ்சி யேத்திற்

சங்கர னெதிரே தோன்றிச சமரிடை வெல்லு மாற்ற
லிங்குணக் கருளு மென்று லிமையவ ரெவரும் போனார் ௬

ஈசனைப் பூசை செய்தா லெததிற மாமோ வென்று
தேசுடைய பருதி வேநதன் சிநதனை கவலுங் காலை
பாசவே ரரிநது மேலாம் படிமவே டததை னுரு
மோசைகூர மகதி நல்யா ழுறுதவ னவண்வந் துற்றான் ௭

உறுதலும பதஙக ளேக்கி யுளத்திடை யுவகை பொஙக
மறுவறு முனிபா லெய்தி வானவ ருரைதத மாறற
மறிவுறுத திட்டு மனமே ளுஙகதற குபாயநதோநது
தெறுகதிரச சுடரை நோக்கிசசிவாசசனைமுறைமைசொல்வான்

விதிமுறை சிவனைப பூசை விககிர கஙக டமமிற
கதிரவலி லிஙகத தாறறல கடடுரைத் திடுது கீல
மதிகமா மானு டதகி லாயிட மதிக மாகுந
துதிபெறு தேவ லிஙகந தனனினுந தூய தாமால ௯

தூயதிவ லியலிங கததிற சுயமபுவே சுயமபு தனனி
லேயமா லிரதன லிஙக மிரததின லிஙகந தனனின
மேயமா ணிகக மேலா மேருவில வருமா ணிககப
பாயொளி யிலிஙக மேயிப பாரிடத ததிக மாமால ௰

ஆதலாற் றிருமா ணிக்க வசலதனை யடைநது பூசை
காதலா னுனபின் வநத கடுஙகுர லுருமு தனனை
லேதமின் றுகச செயதே யிராக்கதா தமமை வென்று
வாதவ கீனதி யென்றே யாழமுனி போயி னானால ௧௧

வரமுனி போய பினனர் வானுரு மேறறை வானந
திரிபவ னினைபப வெய்தித திரைகட லேழும வெம்பிக்
குரைபுனற சுருக்குண டோம குண்டமொத தழல வோங்கும்
பருவரை யெனவையுந தீயப் பகீரண்ட முடைய மாதோ ௧௨

வநதரு மேறு முன்னோன் மலரடி வணங்க லோடுஞ
சிநதனை மகிழ்நது பெம்மான் சேவடிதொழுது பூசை

பந்தமி லன்பி னூற்றி யாக்கரை வெல்வான் வேண்டிப்
புந்திசெய் தனநீ போநது பூசனை புரிதி யென்றான் ௪௩

என்றுகா விரியின் றெனபா லிரத்தின கிரியைச சார்நது
மன்றநீ யெமது போல வாவியொன் றமைத்து மூழ்கிக்
கொன்றையஞ்சடையோன்பாதங்குழைவினிற்போறறுகென்ன
நன்றெனப போநதவ வாறே நானில மதன்க ணெய்தி ௪௪

செய்ய மாணிக்க வெறபைச சோநததி னிருந்தி திககிற
லையரா முடிமே லுறற பாலைவரூ மூலக மெலலா
முய்யவே பதுமகண போா லுவநதொரு தடாகங கண்டு
நையபா றினறி மூழ்கி நபட ஞெயதனை நண்ணி ௪௫

அருசசனை புரித லோடு மம்லனு மெதிரே தோன்றி
விருப்புடை நீசெய் பூசை வியநதனம வேண்டிற றெல்லா
முரைததருள பெறுதி யெனன வுருமுசே வடிகள போறறி
விரிசசிக னாககா போரில வெல்வது வேணடு மெனறுன ௪௬

என்றலு முருமை நோககி யிளமதிக கணணி யெமமான்
நன்றுநன் றெனனச சோதி ஞாயிறு நிருதா தமமை
வென்றிடு மாறற றநதோம வெஞசமா விளைததன னேயைப
பொனறிடப பொருதி யென்னப் புஙகவ னிலிஙகத துறறுன

வரபபா னருளப பெறறு வானுரு மேறு மீண்டு
திரஙகொளபே ரனபு தனனுற செஙகதி தனைவந திததே
அரநதைவே ராககும பெமமானருளபெறறுவநதேனென்னக்
காமபல படைததோன் சாலக கடஙகடா தனமென் றுனல்

பசும்பரி யேழு பூண்ட படரொளித தோக டாவி
விசும்பினி லிரவிப புததேள விளங்கியங் கியங்கா நின்று
னைசநதிடு பேட மாதத் தெய்துபூ ரணையி லதத
மசைநதன னடையுங காலை யருசசனை புரிவ னன்றே ௪௯

அண்ணல்பூ சனையு வந்த வருணன்ற னிளவ லுக்குக்
கண்ணகன் ஞாலத துற்றுக் கடவுண் மால் வரையை யெய்தி

பெண்ணொரு பாகன் பூசை பேணுதி யென்றவ் வாறே
யுண்ணயந திடியும பூசை யும்பனுக்கியற்று மன்றே ௨0

அன்று தொட் டென்றுஞ் சோதி யலாகதிரப் பரிதி வேந்தா
மொன்றிய வசனி தானு முமையொரு பாகன் பூசை
நன்றெனப புரியு மாயி னலமகொளத தலததின மேன்மை
யின்றெவ ருரைபப தெஙஙு னிணையதற கிலலை மாதோ ௨௧

இருபபுட னிரவி தீாதத மேதகு நாளில மூழகிக
கருப்புரத தீப மேறறிக் கண்ணுத றனைவந திதநோா
பொருக்கெனப பிணிக ளெல்லாம போகருவா போரில
வெலவாா
செருக்குட னுலகங காததுத தேவாதம முனகுங காபபாா

பாரிடத தினைய காதை படிபபவா படிககக கேடபோா
போரிடைப பகைமை வெனறு புவனமோா மூனறும
போறறச
சீாபல பெறறு வாழநது தீபபிணி முழுது நீங்கி
மாரன்பே ரழகு வாயநது வானுல காளவ ரனறே ௨௩

இடி பூசிதத சருககம
முற்றிறறு
ஆகத்திரு விருத்தம ௩0௯



# ௮-வது அகத்தியர் பூசித்த சருக்கம்.

---

### கலிநிலைத்துறை

விந்த மால்வரை யடக்கிய விழுத்தவக் கிழவன்
வந்து பூசனை யுஞற்றிய மான்மிய மினிச்சொல்
முந்த மால்வரை முனிவிர்காள் கேண்மினென் றுரைப்பா
னிந்த வானில முப்பதற் கிருந்தவச் சூதன் ௧

இமைய மால்வரைக் குத்தர திசையினி லிசைகூர்
தமைய லானிக ரின்றிய தாபதர் குழுக்கொண்
டமைய வாழ்தரு புட்பகத் திரைக்கரை யடைந்தே
வுமைம ணாளன தருளினா லகத்திய னுறைநாள் ௨

ஆவ மீக்கொள வந்தமா முனிவரன் றனைப்பா
ணர் தபெயா மாமுனி நண்ணுதல் புரிந்தே
யீர நெஞ்சினா லிருவரு மளவளாய் வைகிப்
பாரிடத்தினிற் பதிபல தொழுதுமென் றெழுந்தார். ௩

எழுந்து காசியீ ரதம்பிர பாசமு மிறைஞ்சித்
தொழுந்த கைத்தகே தாரமில் வாடவி தொழுது
செழும்பு னற்கங்கைத் தீர்த்தக் காசிசென் றேத்தி
யழுந்து மன்பினற் பிரயா கையோ டவந்தி கைதொழுதே ௪

கும்ப யோனியு நாரத முனியுங்கோ மதியோ
டம்பர் மேவிய தலங்களு நதிகளு மேத்தி
யும்பர் நாடுபோ லுறுவிந்தா டவியுறுங் காலை
வெம்புதீ விழிப் பிரேதமொன் றங்கணே வியந்தே ௫

உற்ற போதினி லுளங்குழைந் தகத்திய முனிவன்
மற்ற விங்கிது முதலிவீ டெய்துறு மாண்பா

லற்ற மில்சிவ தலம்பல வணங்கி வந்தடைவ
னற்ற வாவென நாரத னோர்திசை நடந்தான்

தென்று ளிததனை றிபபிய மகதியாழ முனிவன்
றன்ற னித்தனன் போதலுந தண்டமிழ்ச சலதி
யென்று தெண்டிரைக் கடலினை பருகிய வெஙகோ
னன்ற வன்பிறை காவிரி நதிககரை யடைநதான் எ

அடைநத மாமுனி திருககடமு பநதுறை யதனைத
தொடர்நத வன்பினல வணஙகுபு சுருதிநான முகததோன்
படாநத பேரொளி வேளவிசெய் ததிறம படைதத
தடங்கு லாவிய காவிரித தண்புனல மூழ்கி அ

நிறைநத வபபுனல் கொண்டுதண் குண்டிகை நிரபபி
யறநத வாதவ னைநதெழுத தருணெறி யோதி
விறைநது பேரயபபிரே ததினிற றெழிதத்தும விலவேள்
சிறநத பேரெழில பெறறனன றிசையெலாம வியபப கூ

குறிய மாமுனி குண்டிகைப புனறெளித திடலும்
வெறிய பிரேதமாங குமபனு குதலொரு வியபபோ
வறியிற காரிருட பிரேதமங குறுதலு மமபொன
செறியு மாமணித தீர்த்தமான மியமெலாந தெரிபபார் கO

அததி ருத்தல பானமிய மளபபதற கெளிதோ
முத்தி யாவாக்குங கொடுததது முறைமையா லெனறுங
கததி கைககுழல பாகனவிற றிருபபணற கடலகு
ழிதத ரிதலத தெயபதி யிபபதிக கிணையே கக

குமப யோனியு மவவுழிக் குழைநதபே ரனபா
லும்பா போறறுறு முததா திசைமுக னுகி
நம்பன் பூசனை செயயுதை யததெதிர நணணி
இம்பர் வேண்டிய வரமெலா மியன்முனிக் களிததான் கஉ

உதைய காலேயி லுமபர்கோன் றேன்றலா லவவூ
ருதைய மாபுரி யாயதிவ வுலகொலாம் போறற

வுதைய காலையி லொருமகலர் தாமரைவதனத்
துலைய பானுவொத தொளிதிக ழநதவீ ரன்றே ௫௪

விடையின பாகனை விடைகொடு மேதகு முனிவன்
சடையின வானதி தரித்தகோன் மாணிக்கச சயிலத்
தடைவி னெய்தின னண்ணறகு மேறறிசை யதன்கட்
டடையி லணபொடு தண்டிறை றடாகபொன் றமைத்தான் ௫௫

கஙகை யாதிய தீரததங்க ளனைததுமக கணததிற
பொஙகு தீபபுனற றடமெலாம பொலிவுறத தாபித
தஙகை யாலவிநதத தகநதைபைக் கடிநதரு ளறவோன்
சஙகை யினறிடிய முழுகினன சநநிதி யடைநதான ௫௬

அடைநத மாமுனி யருசசனைக காயின வெலலாம
படாநத காதலா லொருவபிற பாஙகுறத் தொகுத்து
மடஙக ழுகக்கிதன் பஙகனை மததியா னத்திற
றொடாநது பூசனை புரிநதனபா லெதிாநினறு துதிப்பான் ௫௭

அறுசீரடியாசிரிய விருததம

நேயனே யனபு தன்னு னெஞசிடை நினையா தோர்க்குச்
சேயனே யளவி லாத செல்வனே திகிரி தாங்கு
மாயனே முதலாந தேவா வணஙகுமா ணிக்க வெறபிற்
றாயனே மததி யானச சொககனே போறறி போறறி ௧

ஆதியா யனாதி யாகி யகண்ட பூரணமாய் மேலாய்
நீதியாய் நினைவுக் கெட்டா நின்மலா னநத மாகி
யோதியா வையுமு ணாநதோ ருறையு மாணிகக வெறபிற்
சோதியாய் மததி யானச சொககனே போறறி போறறி

ஞான்றுதேன் றுளிக்குங் கொன்றை நாண்மலாத் தொடைய
தோடும்
வான்றளிக் கங்கை யாறு மணிமுடிக் கணிந்தாய் போற்றி
யென்று பேரனபு பூண்டார்க் கிடர்புகா வண்ணங் காக்குந்
தோன்றலே மததி யானச சொககனே போறறி போற்றி ௩

முத்தனை யினைய வாறு மூதறி முனிவன் போற்ற
வத்தனு மெதிரே தோன்றி யகத்திடை வேண்டிற் றெல்லாஞ்
சுத்தனே மொழிதி யென்னத் தூயமா தவனு மன்பா
லித்தகை வரங்க ளெல்லா மியல்புறக் கேட்க லுற்றான். உ0

அஞ்செழுத் துண்மை யின்ன மடியனுக் கருளல் வேண்டும்
நெஞ்சிடை யன்பா லென்று நின்னைமத் தியானந் தனிற்
செஞ்சவே தெரிசித் தோர்கள் சிவகதி பெறுதல் வேண்டு
நஞ்சமு தாக வுண்ட நம்பனே யென்று பின்னும் உக

துய்யனே மதத்தி யானச் சொக்கனே யென்று நாமம்
வையகம் வழங்கல் வேண்டும் வபங்குகாத் திகைமா தத்திற்
செய்யசெங் கதிரோ னுளிற் செய்தவென் றீர்த்த மூழ்கில்
வெய்யதீப் பிணிக ளெல்லாம் விரைந்துடன் றீர்த்தல் வேண்டும்.

அண்ணலே யினைய மாதத் தாருளா கோமயத்தை
வண்ணவான் சிரத்தில் வைத்து மற்றிதின் மூழ்கி னோர்கள்
எண்ணியின் றுதித்த பாட லியல்புற வழுத்தி னோர்கள்
திண்ணிய பவங்க ளெல்லாந் தீர்ந்துசீர் பெறுதல் வேண்டும்

என்று மறுகால் பாட வேடவிழ்த் திளந்தேன் பிலகு
மன்றலங் குழலி பாகன் வகுத்தவவ் வரங்க ளெல்லாம்
நன்றென மலையத் துற்ற நற்றவன் மகிழ நல்கி
பொன்றிகழ் புனித லிங்கம் புகுந்திவீற் றிருந்தா னன்றே உச

சாற்றுசிச் சரிதை தன்னைச் சந்தம் படித்து ளோர்க
ளாற்றிசைப் புவன மெல்லா நலம்பெறப் புரந்து பின்னா
ளேற்றுரு டியமை மாதா குவிமுலை தடத்தின் மூழ்கி
வீற்றினி திருப்ப ரம்பொன் விண்ணுல கத்தி லன்றே உரு

அகத்தியா பூசித்த சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௩௩௪.

## ௯-வது உரோமசர் பூசித்த சருக்கம்.

---

குறுமுனிச் சரிதை முற்றுங் கூறினை வேறு வேறு
வுறுதிகள் பலவுஞ் சொற்று யுயர்தவச் சூத பின்னு
மறிவுறு நெறியி னூலே யுத்தம மான்மி யங்க
ணெறிபெறத் தமியேங் கேட்ப நேயமுற் றுரைத்தி யென்றார்

மாதவ ரினைய வாறு வருந்தலும் புராண முற்று
மோதிநன் குணர்ந்த தூயோ னுரோமசன் சரிதை தன்னைப்
பாதிவெண் மதியஞ் சூடும் பரம்பரன் பாதம் போற்றிக்
காதலாற் றுறவின் மிக்க கடவுளர்க் குரைக்க லுற்றான் ௨

திக்கிரு நான்குங் காக்குந் திரமிசன் வரத்தால் வந்த
தக்கவி ராச னடம்பா சமரவே லரசன் றோன்று
னிகருவேள் வனப்புஞ் சேட னென்னத்தகு மறிவு மெய்தி
மைக்கடற் புடவி யெல்லா மனுவெனப் புரக்கு நாளில் ௩

நாலிரு கோடி செம்பொன் ஞாயநூ னெறியா லீட்டிக்
கோல்வளை யாம லோச்சிக் குவலயம் புரக்கு நாளின்
மேனுயர் தருவைப் பற்றி வெறியபுல லுருவி யுற்ற
போலவோர் தூர்த்தன் வந்து புரவலன் றனைச்சார்ந் தான்

புதரிடை மறைந்த வேடன் புள்ளினைச் சிமிழ்த்தா லென்ன
விதமிவன் போல யாரே யியம்புவா வல்லா னென்ன
சதமகன் குரவன் போலச் சற்குண மெவைக்கும் வித்தாய்
மதவலி வேந்த னுள்ள மகிழ்வுச் சரிக்கு நாளில் ௫

மந்திரித் தலைவன் கூறு மாற்றங்க ளவையுஞ் சாற்றச்
சிந்துரத் திலத மாதர் சேட்டைநூற் றிறமே செப்பிச்
சந்தனக் கலவை மார்பன் சற்குணம் பிறழ்ந்து சாய
வந்தமின் றுய லோகா யதன்மத மறைதல் செய்வான் ௬

அறுவகைப் பொறியி னாலு மறிதலை யளவை யாகு
நெறிதரு மவற்றாற் காணு நேயங்க ளளவை யென்னுஞ்
செறிதரு வங்கி தீர்த் திகழுமப் பொன்னி னுங்கும
நெறிதெரிந் துறுமின் னனகு நிச்சய மென்பர் மேலோர் ௭

தாதகி யரும்புஞ் செய்ய சாலிபோ தனமுங் கன்னன
மேதகு மணிபு நெலலும் விரவிய சமட்டி தனனுற
காதலோர கமழு மினபக் களிமது பிறநதாற போல
வேதமில பூத நானகி னிசைவினா லுணர்வு தோன்றும ௮

ஓதுமப பூத நானகு மொனறுபொன் றினுமய போத
மேதகு முணர்வு மாயும வியநதவப பூத நானகுந
தாதவிழ தாம மாபத தழ்பூதந ததது முள்ளா
தீதிபி னுஙகு மிநத நெறியினின் றாரே யுயநதார ௯

ஆதலாற பலஙக ளில்லை யனனவை தனனைத தூபகு
தீதிபான மாசு மிலலை நெறியினு லவறறை யூட்டு
நாதனு மிலலை முதத நகைவடந திளகதுங கொஙகை
மாதரா ரினப வாரி மடுததலே முததிபாமால ௰

இன்னன பலவும பனனு ளெடுததெடுதத தினைய கூறி
மனனனைச சாரு வாக மதமெனுங கபததுள் வீழததி
பன்னவன் றனுந தீயோ னினையா லறஙகண மாறிக்
கனனியா போகந துப்ததுக் காலனுக குணவு மானுன் ௧௧

அறநெறி திறப்பு வேநத னுபுஞக் கெல்லை கண்டு
மறவிதன் னுலகத் தெய்த மறறவன் மறலி தானு
முறைமுறை யிலோப னென்பா னொருவனைக காண வஞசித
தறுகணு ளரைபங் கேவித தண்டஞசெய் விக்க லுறறான் ௧௨

எரியழன் முதலாந தானத் திருத்தெனக் கொடிய வெயய
நரகிடை யுயத்தி டுக்கண் ணனிவிளைத் திட்டுப் பின்னா
பருதியு மதியுந தாழப் பனிவிசும் பகடு கீண்ட
பெருவரை யடவி தனனுட் பிரேதமாயத் திரிய நீததார ௧௩

அழிபசிக் காற்ற லாகி யடவிக ளோர்டித் தென்று
மழுவினும் பிளத்தல் கூடா வஞ்சிலைக் கரியுந் தீய
உழுவையே முதலவி லங்கி னானசுவைத் துண்டு தீரா
தெழுதரு மூதாதை தீயா லெரிப்புண்டு நிழலு மின்றி

உருத்தெழு மாதபத்தா லுலைப்புண்டு சண்ட வாயு
முரித்தடித் திடலும் பாரின் பொத்துண்டு நிசமு மின்றிக்
குருத்துவிட் டெழுந்துகாட்டுங் கொளுங்கனல்கனிந்துமாறாத்
தரித்திரத் தழுங்கு வார்போற் றெருமந்தயங்குங்காலை

விந்தமால் வரையி னங்கண் மேலோர் னறந்தி றாலே
சந்திரோ தயம்போல வந்து தவத்தினுக் குறைவுள் ளாகி
ஈந்துதிப் பொறியும் வென்ற வறிவுடை யுரோம சமே
ரெந்தைதோன் றுதலுந் தீயோ னெரிபசிக் கிறங்கென் றுற்றன்

மாமுனி தன்னைக் கண்டு மகிழ்ச்சியா லந்தங் குற்று
வேமமா ஞான மெய்த்தி யிணையடி இறைஞ்சி நிற்பக்
காமமே முதல வாய கடும்பகை யெனவ்வயும் வென்ற
கோமுனியனனைசெய்திருகிகொண்டனகுரைக்கலுற்றான்

முன்னைய பிறவி தன்னின் மூர்க்கனே யெண்ணில் பாவந்
துன்னினை யாதை யாலே சூழ்ந்தநின் னறங்க ளெல்லா
மின்னலகூர் சூது வெஃகு மீனாதம மிலலம் போல
மன்னுத லின்றி முற்று மாய்ந்தன மாத ராலே ௧௯

கூறுதற கரிதாய் நீசெய் கொடியவெம் பாவத் தாலே
வேறொரு வழியு மின்றால் விளைத்தவித் தீமைதீர
வாறெதிர்ப் பத்தி லாலே யண்ணறன் கருணை தன்னைப்
பேறுதந் திடுது மென்னாப் பெருந்தவ னுடன்கொண் டேற்றான்

அஞ்சிறை வண்டு கிண்டு வலர்கெழு மஞ்சி லோதிப்
பஞ்சின்மென் னடியாள் பாகன் பதிபல தொழுது போற்றி
மஞ்சிவர் சோலை சூழ்ந்த மாநதி பலவு மாடிக்
கஞ்சமா மலரோ னன்னான் காவிரி நதியைச் சார்ந்தான் ௨0

உடன்வரும் பிரேத ரூபத் தொருவனை வொளிநீர்ப பொன்னி
படிவத்து செய்து தென்பாற பாயொளி பரப்பி யோங்கிப்
புடைவளர் பொதும்பர் மல்கிப் பூதலம பொலிய வந்த
வடகயி லாய மொத்த மாணிக்க மலையைச் சார்ந்தான் உக

காண்டலு மகிழ்ச்சி பொங்கிக் கரகம லங்கள் கூப்பி
யாண்டடை முனிவ னங்கே யவனொடும பணிந்து போற்றித்
தூண்டிய சுடரே போலத் தோன்றலை வீற றிருக்கு மந்தச
சேணொடு திருமாணிக்கச் செழுமலைப பாங்க ருற்றான உஉ

மருப்பினைப் பழித்தன் ஞாந்து மருங்குலுள் வாங்க வோங்கு
மருப்பிள முலையாள பாக னமாந்தினி துறையு மந்தப
பொருப்பினகீழ வரையின மேலாம புண்ணிய தீர்த்தமொன்று
விருப்புடன வாயு திக்கில மேவரக் கண்டு மாதோ உங

இளம்பிறை சூடிய பாந்த ளிகலறப் புனைந்த மோலிக்
களங்கனி யனைய கண்டன் கருணையாற கங்கை யாதி
வளங்கெழு நதிக ளெல்லாம வரமபுரிந தவனை நோக்கி
யுளங்கனிந தாடு கென்று னுரோமச முனிவ னன்றே உச

பெருந்தவ முனிவ னேவப பிரேதரூ பத்தைப பெற்றோ
னரும்பெருந தீர்த்தந தன்னி லாடினா னுடலேலாம
கரும்புகைச சிலையாகக் கொண்ட காமனே யிவனென றேத்த
விரும்புனல லுருவம பெற்றான் விகடரூ பமுமொழிந்தான உரு

காமனே யென்ன நின்ற காவலன றனைக்கொண் டன்னோ
னேமநீள் வரையி னேறி யிருஞ்சிறை வண்டு கிண்டுந
தாமநேர் குழலி பாகன் றணையலாச சரணம போற்றி
சோமகற கருளல வேண்டுங் குழகவென் றேத்து கின்றான்.

புலியதள் உடுத்தாய் போற்றி பூதநா யகனே போற்றி
கலியுக வரதா போற்றி கண்கணமுன் றுடையாய் போற்றி
வெலிபுலி மூன்றுங் காக்க வின்னருள் புரிந்தாய போற்றி
வொலிகடல் விடமுண்டெல்லா வுலகமும புரந்தாய் போற்றி

முப்புர மெரித்தாய் போற்றி மூவரைக் காத்தாய் போற்றி
துப்புடை மத்த யானைத் தோலுரி யசைத்தாய் போற்றி
யொப்புமை யில்லாய் போற்றி யுணர்பவ ருளத்து ளென்றும்
வைப்பெனப் பொதிந்து வைகும் வள்ளலே போற்றி போற்றி

கடுங்குரன் மானுந் தீய கணிச்சியு தரித்தாய் போற்றி
நெடுங்குவட் டினைத் துளக்கு நிருதனை யடர்த்தாய் போற்றி
யடுங்கொடுங் கூற்றை யெற்று மம்புயப் பதத்தாய் போற்றி
நடம்புரிந் தருளா நிறந்த நம்பனே போற்றி போற்றி உக

பூங்கணை தொடுக்கும்வில வேள்புரம்பொடித்தருள்வாய்போற்றி
தீங்கரும பென்ன நாளுந் தேனெறி பழங்கிக் கூவு
மாங்குயிற் குலத்தை யெள்ளி வடித்ததெள் ளமுத மென்னப்
பாங்குறுங் குதலை நங்கை பங்கனே போற்றி போற்றி கூ

பிணிப பிணியு மூவாப் பிறையும்வெள் ளெருக்கு மாறும்
வனனியுங் கொன்றைப் போது மத்தமு மறுகு நன்னீர்க்
கன்னியுந் துமைபத் தாருங் கமழுவங் கிளமுஞ் சூடுஞ்
சென்னியிற் சென்னீர் பாயுந் திருமுடித் தழும்பா போற்றி

எனறின்ன பலவு மேத்தி யிறைஞ்சிய முனிவை நோக்கி
நனறுநன் றென்ன வீசன னுவலந் தீவுந் தொலலாம்
வெனறிவே லரசனுங் வேதிய வூழி காறுந்
தனறனிச செங்கோ லோச்சித் தாரதலம் புரந்து பின்னர் கஉ

அலாமுலை மயிலனு சாய லரம்பைபா கவரி வீச
பொலனருந் தருவின் னீழற புரந்தர னுங வைகி
வலந்தருஞ் சூல வேலு மழுவுங்கைக் கொண்டு நமப
னலம்பெறு கைலை வாழ நலவரந் தந்தா மென்றார். கரு

பொருவறுந் திருமாணிக்கப பொருபபினுக்கிறைவபபோற்றி
யிருவரும விடைகொண் டேறா ரீசனு மிலிங்கத் தூற்று
னருவரை யனைப மாரப னருந்தவ முனிவன் பாதம
விரைகமழ் மலர்க டூவி மீண்டுமீண் டிறைஞ்சிப் போற்றி கச

தீயனும்ப் பிரேத ரூடஞ் செறிந்திடுஞ் சிறியே னுகில்
பேயனும்த் திரிகதேன் றன்னைப பெரிதுங்கை தூக்கியைய
காயனு ரருள்பெற் றுய்ய நலகினை யிதற்குக் கைம்மா
றுயின தென்கொல யானுன் னடிமைக்கு மடிமை யென்றுன்.

வேறுதனவ் வாறு கூறி விடைகொண்டு முனியைப போற்றிப்
போநதனன் முனியு மநதப புணணியப பொருபபினவைகிச
சாநதணி குவவுக் கொஙகைத தையலோா பாகன பாத
போநதிரன மலாசவேவி யினிதுட னமாநதா னனறே ௩௬

பேசுமிக காதை சொறறோா பெரிதெனக கேட்டு நலலோா
நேசஙகொண் டேழுது பேலோா நீசசீருந தீமை யொருமா
பாசஙக ளனைதது நீஙகிப பாருல காணடு பினனா
ஈசன்செம முளரி போலு மிணையடி நீழல சோவாா ௩௭

உரோமசா பூசிதத சருக்கம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். ௩௭௧



## க0-வது திருவாட்போக்கிச் சருக்கம்.

### கலிவிருத்தம்

நல்லறம புரிந்தருண் ஞான மாதவ
செல்லொளி நீணமுடி யிறைவனை வைகிய
மலலலங் குவடுவாட் போக்கி யாயது
சொலலுக வென்னலு மூசூதன் சொலலுவான் க

திருந்திய கோலினன் செய்ய வேலினன்
பொருந்தலர்க் கடந்திடும் பொருவி லாறறலான்
மருந்தினு மினியவன மாக ராதொட
ரருந்திறற காமனை யனைய பொறபினன் உ

அருளினுக் குறையுளே யாய தூயவன்
மருளறு காடசியான வரமபில சீரததியான
தெரிவரும பெருமையான் சிவனை நாடொறு
முரிமையிற பூசைசெய் துவந்த சிந்தையான் ங

கல்வியங் பெருங்கடற கரைகண டுறறவன்
செலவமு நறகுணச சிறபபும பெறறவ
னெலலையி லுலகைககண் ணிமையிற காததரு
ளலலவன மனுபதி யெனன மேலவன ச

நகைநில வெறிக்குமவெண் ணளினப போதென
முகமலாந் தருளிய முதத வெண்கொடை
யகலிட நீழலசெய் யானை போககினு
னிகலறு சூரிய வனனி யென்பவன் ரு

### அறுசீரடியாசிரிய விருத்தம்

பின்னலவெண டரங்க வேலைப் பெருங்கடல் வளாக மெல்லா
மன்னைபோற் புரக்கு நாளி லகிலமு நடுக்க மெய்த
மன்னிய சிங்க வேறறின் வலிபதி னூபி ரத்தோ
டின்னல்கூர் மயிட னென்றோ ரிகல்புரி யவுணனுற்றான் ௬

உற்றகா ரவுணன் பன்னா ளுந்திபூத் தவனை நோக்கி
நற்றவம் புரிந்தா னந்த நான்முகக் கடவு டோன்றிக்
குற்றமின் றாக நீசெய் கோதிலாத் தவங்க ணோக்கி
யற்றமி லுவகை பூத்தா மாவமேவ வரதி லென்றான் ௭

வேதிய னினைய கூற வெஞ்சினத் தவுணன் கஞ்சப்
பாதங்கள் பணிந்து முக்கட் பண்ணவன் முகுந்த னோடு
மேதமி லிந்தி ராதி யிமையவ ரிவரா லென்று
மாதங்க மின்றி வாழ்தற் கருமபடை யெவையும்வேண்டும் ௮

இங்கெனக் கென்று வேண்டி யியம்பிய வரங்க ளெல்லாம்
பங்கய னுதவிப் போந்தான் பாழித்தோ ளவுணர் கோவுஞ்
சங்கரன் றனக்கு மம்ம தப்புதற் கரிய தாகி
யங்கண்மா நிலத்தில் வெய்ய வாலகா லம்போற் புக்கான் ௯

நல்லற மெவையு மாற நலந்திக ழந்த ணா
ரெல்லையில் வேள்வி யெண்ணி லிமையவ ரால யங்கள்
பல்லவுஞ் சிதைய நூறிப் படுமதஞ் செருக்கிப் பாருக்
கல்லல்செய் தழிக்க வன்றோ னழிவினுக் கிரங்கி வேந்தன் ௰

பாலொளி விரிக்குஞ் செய்ய பருப்பத மதனைச் சார்ந்து
மேலுறை யமரர் சித்தர் விஞ்சைய ரியக்கர் மேன்மை
நாலிரு திக்குங் காக்கு நலங்கெழு மிமையோர் மல்குங்
கோலநீள் வரையி னந்தி குரைகழற் கமலம் போற்றி ௧௧

வீரகைவே லரசன் வெய்ய மயிடனா லுலக மெல்லாம்
சோகமிக் கழிந்த வண்ணஞ் சொற்றனன் றொழுது நிற்ப
நாகிள மதியஞ் சூடு நந்தியம் பெருமா னன்றென்
றேகநா யகனுக் கிவ்வா றியம்புது மென்று போந்தான் ௧௨

நம்பனை வணங்கி நந்தி நாயக னணித்தாய் நின்றே
யம்புலி மயிடன் றன்னா லலக்கணுற் றழிந்த வண்ணந்
தும்பையந் தொடையா யீங்கு சொல்லுவான் மனுவந் துற்றா
னெம்பிரான் றிருவு ளத்துக் கேற்றவா றென்னை யென்றான்

நந்தியிவ் வாறு கூற நாதனு நயந்து நோக்கிப்
பைந்தொடை மனுவை யிங்கு வரப்பகர்ந் திடுவா யென்னச்
சிந்தனை மகிழ்ந்தன் னோனுந் திண்டிறன் மனுவுக் கோதக்
கந்தடு களிற்று வேந்துங் கழல்பணிந் தாங்கு புக்கான் ௰௪

புக்கவ னன்பு கூர்ந்தே புளகமெய் யரும்பக் கண்ணீ
ரொக்கமா பகநனைப்ப வொளிமுடி வணங்கிப் போற்றி
மைக்கட லுலக மெல்லா மயிடனு லுலைந்த வாறு
செக்காவா னிறத்தி னார்க்குத் திருவுளந் தேறச் சொற்றான்

சொற்றலுங் கருணை மூர்த்தி தோடவிழ் கமலப் போதி
னுற்றவன் றனனு லன்னோ னுறுவர மனைத்து நோக்கி
மற்றவன் றன்னைப் பார்த்து மயிடனை யிடப்பான் மேவுஞ்
சிற்றிடை யிவளை யேவிச் செகுத்துநீ சேர்தி யென்றான் ௰௬

பரமப ரனினைய கூறப் பார்த்திபா திலகன் றானுங்
கரந்தலை முகிழ்த்துப் பாத கமலங்கள் முடிமேற் சூடி
நிரந்தரன் றன்னைப் போற்றி நெடிதக மகிழ்ந்து சால
வரந்தைதீர்ந் தகிலத் தெய்தி யணிநகர் புகுந்தான் மன்னோ.

மாதுமை தன்னை நோக்கி மயிடனைக் கொல்லு மாற்றல்
ஓதின்மற் றுன்னு லன்றி யொருவர்க்கு முறுவ தன்றா
லாதலாற் சிங்க மூர்ந்து வடலெழு துர்க்கை யாகிப்
பூதலம் புகுதி யென்றான் பூவையு மனைய வாறே ௰அ

கன்னிய ரெழுவ ரோடுங் கரசினி புகுந்து சோதி
மின்னியற் படைக ளெல்லாம் வியனகர மெட்டுந் தாங்கித்
துன்னருஞ் சிங்க மூர்ந்து துர்க்கைதன் வடிவ மெய்திப்
பன்னிய வட்ட காசம் பலமுறை புரிந்து மாதோ ௰௯

பற்பல வரைக ளெல்லாம் பாரகமொத் தழுங்க வெற்றி
மறமெறுழில் கிளர்ந்த திண்டோண் மயிடனைத் தேடிக்காணாள்
சிற்பரை சிற்றத் தோடு சேண்டொடு மருணை வெறபிற
பிற்படத் தாண்டு மம்பிற் பெருகுணை கத்தோ டுற்றாள் ௨௰

காண்டகு சிறப்பி னோடு கவலையொன் றுனு மின்றித்
தூண்டிய சுடர்போ லாங்கு சுராசுரர் தொழுது போற்ற
வாண்டகை மடங்கற் பீடத் தமர்ந்தன னிருந்த காலை
மூண்டெழு சண்டவாயு முழக்கம்போன் முழங்கி நேர்ந்தாள்

கொழுங்கனல் விழிகள்சிந்தக் குவவுத்தோள்கொட்டியார்த்து
முழங்கிய விசையை வைகு மூர்க்கனை நோக்கி ஞாலத்
தொழுங்கல பலவுஞ் செய்தா யொழிதியோ வொழியா தாவி
விழுங்குமிக் கொடிய வாளால் வீழ்தியோ விளம்பு கென்றாள்

விஜயை யவ்வாறு கூற வெகுண்டெரி சிதற நோக்கிப்
பைந்தொடி யாத லானம் பக்கல்வந் தினைய கூறி
யுய்ந்தனை பெண்மை யாண்மை யுறுவதெவ் வகையோ வென்று
நிந்தனை பலவுங் கூறி நின்றிடா னென்று சொன்னான் ௨௩

ஊக்கமிக் கெழுந்த தாக்கை யுடன்றுபற் புலவா நந்தை
நாக்கவ ணடங்க வீசி நாந்தகஞ் சுழற்றி யோச்சக்
கோக்களிற் றுழவன் வல்லே கொதித்தெழுந் தணங்கின் மீது
நோக்கரும் படைகள் வீசி நொடிவரை செருப்ப னென்றே

பெண்ணுரு வெடுத்துக் கூற்றம் பிறங்கிய தெனவே நின்ற
திண்ணிய வணங்கி னாகந் திறந்துசெங் குருதி பாய
வெண்ணில் பலகணைக டூண்டி யிகல்செய வவளு மன்னோன்
வண்ணமார் பகத்துச் சூல வாளைவேல் வீசி யார்த்தாள் ௨௫

இருவரு மினைய வாறே யிமையவர் படைகள் வீசி
யொருவருக் கொருவ ராற்ற லொழிவில ராகி மண்டி
வருடமா யிரம்போர் செய்தார் மண்ணும்விண் ணகமு மெல்லா
மரிதரி தென்ன வம்ம வவர்வலிக் களவு முண்டோ ௨௬

வடவையு முருமூரு சீற்ற மாறுகொண் டமர்செய் தென்னத்
திடவரைத் தோள்கள் கொட்டிச் சமர்க்களத் தடருங் காலை
யுடல்சினங் கதுவி விந்தை யுழுவலி மயிடன் றன்னை
யடர்மருப் பிரண்டும் பற்றி யவனியிற் சுழற்றி வீழ்த்தாள்

ஆற்றல்சான் மயிடன் சென்னி யழுந்தத்த னடியூன்றிக்
கூற்றுவா யன்ன வாளாற் கொடியவன் சிரத்தை யீர்த்து
வீற்றுவிற் றுக வேலை யங்கமும் வீசி யார்த்தா
ளேற்றமாம் பிரமசத்தி யுடன்வீர சத்தி யன்றே உ௯

இகல்புரி மயிடன் மீண்டு மீருரு வெடுத்தா னென்ன
வகலிட முழுது மஞ்ச வணங்கெதி ரடுத்த லோடும்
பகலெனக் கிரணம் வீசும் படையுடைச் சமரி வேறு
புகலிடமொன் றுங்காணா ளொன்னிநன் னகையைச் சார்ந்தாள்

அத்திசை யிரண்டும வல்லை யணுகலு மாளி யூர்தி
வித்தகன் வணங்குந தென்பால் விளங்குமா ணிக்க வெற்பை
முத்தக முரிஞ்சுங் கொமமை முகிண்முலை யெழுவ ரோடுஞ்
சித்தமின புறவந் தூற்றாள் சென்றவப் பிரம சத்தி ௩௦

அடிவரை யிடுதற கஞ்சி யதனிபோ ரிரண்டு மாங்கே
தடைபடத் தியங்கி நிறபச சமரியும வரைமீ தேறி
முடியிசை மதியஞ சூடு முதலவனை வணங்கிப போறற
வெடிபடுஞ சிங்க வூர்தி விழைவுற வெதிரவந் தூற்றான் ௩௧

கொண்டல்போ லிருண்ட கண்டன் குமரியைக் குறிபபி னோக்கிக்
கண்டித்த லரிய சந்திர காசமீய்ந் தலைவயி ரண்டுந
துண்டித்தல் புரிதி யென்னத் தூக்கையு மிதுகொ டேயோ
வெண்டிசைக் குமிடிககு மாறற லிடியினை யிடிப்ப தென்றே

மனத்திடைக் குறித்த லோடு மற்றவை தறிந்து பெம்மான்
கனத்திடை யுருவி யோங்குங கதிர்மணிச சிகரத் தொன்றைச்
சினத்தொடு கொண்டுபோழச் செய்தியென் றருளத் தாழ்ந்து
புனக்களி மயிலன் னாளும போழ்ந்தன ளதுகொண் டன்றே

ஐயமீ தின்றிப் பின்ன ரத்திபோ ரிரண்டு மாளத்
தையல்சந் திரகா சப்போர்த் தாரைவா ளோச்சிப்போழ்ந்தாள்
பெய்கழ லமரரெல்லாம் பெரிதரி தென்ன வேலை
வையகஞ் சிவாய மென்ன மனத்திலற் புதமுற் றாரால் ௩௪

